9th August 1960]

SRI K. B. S. MANI : ஹரிஜனங்களுக்குக் கொடுக்கப்படும் மனைக்கட்டுகளில் சில பள்ளங்கள் நிறைந்த இடங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் அவர்கள் வசிக்கும் கிராமங்களுக்கு வெகுதூரத்திலும் கொடுக்கப்படுவதால், கிராமப்பகுதியிலேயே அவர்களுக்கு நிலத்தைக் கொடுக்க அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI P. KAKKAN : கிராமப் புறங்களில் சர்க்காருடைய புறம்போக்கு நிலங்களாக இருந்தால் அதை அவர்களுக்கு "அஸைன்" செய்கிறோம். அது தனியார் நிலமாக இருந்தால் நிலச்சொந்தக்காரரின் அபிப்பிராயத்தைக் கேட்டுத்தான் நடவடிக்கை எடுக்கப்படுகிறது. சில இடங்களில் மனைகள் பள்ளமாக இருக்கலாம். ஆனால் அதைச் சரிப்படுத்துவதற்கு ஆயிரக் கணக்கான ரூபாய் செலவாகும். அப்படி செய்வதற்கில்லை. ஆகையால், குறிப்பிட்ட இடத்தில்தான் கொடுக்க வேண்டுமென்று சொல்லமுடியாது.

SRI G. G. GURUMURTHI : மனைக்கட்டுகள் கொடுக்கும்போது அவர்களுடைய புறம்போக்கு நிலங்களில் உள்ள பனைமரங்களை வீடு கட்ட உபயோகப்படுத்துவதற்கு அரசாங்கம் உத்தரவிடுமா?

THE HON. SRI P. KAKKAN : புறம்போக்கு நிலங்களில் ஸீப்பேஜினாலோ தீயினாலோ பாதிக்கப்பட்டவர்களுக்கு சில சலுகைகள் கொடுக்கப்படுகின்றன. அங்குள்ள மரங்களை உபயோகப்படுத்த வேண்டுமென்றால், கலெக்டரிடம் தெரிவித்தால் அவர் பரிசீலனை செய்வார்.

*Hostel for Senior Co-operative Inspectors undergoing training*

* 33 Q.—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to construct a hostel for the Senior Inspectors of Co-operative Societies undergoing training?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir.

*Award of prizes to elementary school teachers*

* 34 Q.—SRI P. G. MANICKAM :<br>SRI S. M. ANNAMALAI : } கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

கல்வித் துறையில் ஆரம்ப ஆசிரியர்களும், ஆசிரியைகளும் செய்யும் மெச்சத்தக்க சேவையை அங்கீகரித்துப் பாராட்டுவதற்காக பரிசுகளும், தகுதி நற்சான்றிதழ்களும் வழங்குவதற்கான திட்டம் எப்போது அமுலுக்குக் கொண்டுவரப்படும்?

THE HON. SRI C. SUBRAMANIAM : There are at present two schemes for the award of prizes to elementary school teachers to render meritorious service in the field of education—one instituted by the Government of India with effect from the school year 1958–59 and the other instituted by the State Government with effect from the school year 1959–60.

[9th August 1960

SRI P. G. MANICKAM : ஆரம்ப ஆசிரியர்கள் என்னென்ன விதமான சேவைகள் செய்தால் பரிசுகள் வழங்கப்படும் ? அந்த சேவைகளின் விவரங்களை கலம் அமைச்சர் அவர்கள் கொடுக்க முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதாவது அறிக்கையின் பிரகாரம் பொதுவாக கல்வியின் வளர்ச்சிக்கு நல்ல முறையில் சேவை செய்கிறார்கள் என்பதற்குப் பரிசுகள் வழங்கப்படுகின்றன. அதற்காக ஒரு பரீட்சை வைத்து எந்த முறையில் அவர்கள் வேலை செய்யவேண்டுமென்று கட்டுப்படுத்துவதல்ல.

SRI S. M. ANNAMALAI : மத்திய சர்க்கார் இந்தப் பரிசுகளைக் கொடுக்கும்போது மாநில சர்க்காரின் யோசனையைக் கேட்டு கொடுக்கப்படுகிறதா ? அப்படியென்றால் எந்த அடிப்படையில் சிபார்சு செய்திருக்கிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM: இங்கே இதற்கு ஒரு கமிட்டி அமைக்கப்பட்டிருக்கிறது. அதற்கு டி.பி.ஐ. சேர்மன் ஆகவும், டிரெயினிங் காலேஜ் பிரின்சிபாலும், கல்வியிலே அக்கரையுள்ள ஒருவரும் மெம்பர்களாக இருக்கிறார்கள். இந்தக் கமிட்டியின் சிபார்சின் அடிப்படையிலே மத்திய அரசாங்கம் பரிசு வழங்குகிறது.

SRI P. G. MANICKAM: ஒவ்வொரு வருஷமும் எவ்வளவு பேருக்கு ரொக்கப்பரிசுகள், எவ்வளவு பேருக்கு சர்டிபிகேட்டுகள் வழங்கப்படுகின்றன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதிலே மத்திய அரசாங்கத்தின் திட்டப்பிரகாரம் இரண்டு பரிசுகள் வழங்கப்படுகின்றன. ஒவ்வொருவருக்கும் 500 ரூபாய் என்று இரண்டு பரிசுகள் வழங்கப்படுகின்றன. சென்னை அரசாங்கம் கல்வி ஜில்லா அடிப்படையில் 24 கல்வி ஜில்லாக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு ஜில்லாவிற்கும் இரண்டு பரிசுகளாக 48 பரிசுகள் வழங்கப்படுகின்றன. ஒவ்வொருவருக்கும் 200 ரூபாயும், சர்டிபிகேட்டும் கொடுக்கப்படுகிறது.

SRI K. VINAYAKAM : Sir, did the Government satisfy themselves whether the recommendations made by the Director of Public Instruction as far as teachers in the City are concerned were just and proper or did they simply automatically accept the recommendations?

THE HON. SRI C. SUBRAMANIAM : So far I have not received any complaint against the selections made. Naturally we have to be guided by the recommendations of the Committee. I don't think the Government should set up another machinery to check up these selections.